வருடச் சந்தா போஸ்டேஜ் உள்பட ரூ. 4

[ஸத்க்ரந்தப் ப்ரகாசந ஸபையில் மெம்பர்களாகச் சேர்ந்தவர்கள்
இதற்காகத் தனிச் சந்தா செலுத்தவேண்டா]

# ஸ்ரீராமாநுஜன்.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

— 3 —

பேரியல்நெஞ்சே அடிபணிந்தே னுன்னை * பேய்ப்பிறவிப்
பூரியரோடுள்ள சுற்றம் புலர்த்தி * பொருவருஞ்சீர்
ஆரியன் செம்மை யிராமாநுசமுனிக் கன்புசெய்யும்
சீரியபேறுடையார் * அடிக்கீ ழென்னைச் சேர்த்ததற்கே.

மதராஸ்

ஸத்கிரந்தப்பிரகாசன சபையின் வெளியீடு

கிடைக்குமிடம்: P. B. அண்ணங்கராசாரியர், க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்

# சென்னை சத்க்ரந்த ப்ரகாசன சபையின்
# ஒரு முக்கியமான அறிக்கை

இந்த சபையின் மூலமாகத் தமிழ்லிபியிலும் தெலுங்குலிபியிலும் அச்சிடப்பட்டு வரும் புத்தகங்களில் வருஷம் ஒன்றுக்கு பெரிய ஸைஜில் 600 பக்கங்களுக்குக் குறையாமல் பதிப்பித்துக்கொடுக்கப்படுமென்று இதுவரை நிபந்தனை செய்யப்பட்டிருந்தது. இனி 800 பக்கங்களுக்குக் குறையாமல் [தனித் தனி தமிழிலும் தெலுங்கிலும்] பதிப்பித்துக்கொடுப்பதாக நிபந்தனை. எனவே வருஷந்தோறும் அதிகப்படியாக 200 பக்கங்கள் [இந்த பத்திரிகை ஸைஜில்] பதிப்பித்துத் தரப்படுமென்றதாயிற்று.

ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையில் 250 ரூ செலுத்திப் பேட்ரன்களாகவோ, 100 ரூ. செலுத்தி லைப் மெம்பர்களாகவோ, மாதந்தோறும் 12 ரூ. செலுத்தி ஆர்டினரி சந்தாதாரர்களாகவோ சேர்ந்தவர்கள் இந்த ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகைக்காகத் தனியே சந்தா செலுத்தவேண்டாமென்பதை மறுபடியும் நினைப்பூட்டுகிறோம். ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையில் மெம்பர்களாகச் சேராமல் ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகையை மாத்திரம் பெற விரும்புமவர்கள் வருடச்சந்தா 4 ரூ மணியார்டர் செய்யவேணும்.

ஸத்க்ரந்தப்ரகாசந ஸபை மெம்பர்கள் மதராஸ், காஞ்சீபுரம் தவிர இதரவூர்களிலிருப்பவர்களாகில் புத்தகங்களைத் தபால் மூலமாக அனுப்புவதற்காக போஸ்டேஜ் தனியே 1—8—0 செலுத்தவேண்டும்.

ஷை ஸபையின் மூலமாக இரண்டு பெரிய க்ரந்தங்கள் அச்சிடப்பட்டு வருகின்றன; (1) திருவாய்மொழியீடு-பகவத்விஷயம் (2) வேதாந்ததேசிகனருளிச்செய்த முப்பத்திரண்டு ரஹஸ்யங்கள். இந்தக்ரந்தங்களிரண்டையுமோ ஏதேனுமொன்றை மாத்திரமோ தனியாகப்பெற விரும்புமவர்கள்-பகவத் விஷயத்திற்காக 20 ரூபாயும் தேசிகரஹஸ்யங்களுக்காக 5 ரூபாயும் 31-12-48 தேதிக்குள் செலுத்தினால் அன்னவர்களுக்கு ஸௌகரியமுண்டு.

இதைப்பற்றின கடிதப்போக்குவரத்துக்கள் யாவும் கீழ்க்கண்ட விலாஸப்படி யாருக.

**P. B. அண்ணங்கராசாரியார்.**
காஞ்சீபுரம்

10—11—48

3

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன்.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை
[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]
ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| முதல் தொகுதி | 10—11—1948 | 3-வது பகுதி |
|---|---|---|

## ஸ்ரீராமாநுஜன்.

"ராஜஹம்ஸம்—ப்ருங்கராஜம்—யதிராஜமீடே".

மணவாளமாமுனிகள் யதிராஜவிம்சதியில் இரண்டாவது ச்லோகத்தில் எம்பெருமானாரை ஹம்ஸமாகவும் வண்டாகவும் அருளிச்செய்துள்ளார். *ஸ்ரீரங்கராஜசரணாம்புஜராஜஹம்ஸம் என்றும் *ஸ்ரீமத்பராங்குசபதாம்புஜப்ருங்கராஜம் என்றும். (அதாவது) ஸ்ரீரங்கநாதனுடைய திருவடித்தாமரைகளிலே ராஜஹம்ஸமாயிருப்பவர்; நம்மாழ்வாருடைய திருவடித்தாமரைகளிலே சிறந்த வண்டாக இருப்பவர் என்று கூறியவாறு. எம்பெருமானார் *தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப் பூண்டவன்பாளன்* [இராமாநுச நூற்றந்தாதி—31] என்கிறபடியே தேவப் பெருமாள் திருவடிவாரத்திலே பேரன்பு பூண்டவராயிருந்தும் ஸ்ரீரங்கநாதனால் விசேஷகடாக்ஷம் செய்தருளப்பெற்றுத் தென் திருவரங்கம் சென்று சேர்ந்து * யாவச்சரீரபாதம் 'அத்ரைவ' ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ * [இவ்வுடல் விழுந்தனையும் இந்தத் திருவரங்கம் பெரிய கோயிலிலேயே இனிது வாழக்கடவீர் - சரணாகதிகத்யம் - 19.] என்று திருவரங்கச் செல்வனால் அநுக்ரஹிக்கப்பட்டு அப்பெருமானுடைய திருவடிவாரத்தின் கீழேயே இனிது வாழ்ந்தபடியினால் ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜ ராஜஹம்ஸம் என்றருளிச் செய்யலாயிற்று. இனி ஸ்ரீமத் பராங்குச பதாம்புஜப்ருங்கராஜம் என்ற விசேஷணத்தினால் - ஸ்வாமி நம்மாழ்வாரது திருவடித்தாமரைகளிலே வண்டுபோல் படிந்திருப்பவரென்றது.

ஆகவிப்படி ஸ்வாமியை ஹம்ஸமாகவும் வண்டாகவும் கூறினதிலிருந்து தேறுகின்ற ஸ்வாமியின் பெருமைகளை ஸ்வாபதேசார்த்தாநுபவப்ராணாளியாலே வெளியிடுகிறோமிங்கு. ஆழ்வார்கள் தமது திவ்யப்பிரபந்தங்களிலே அன்னங்களையும் வண்டுகளையும் தூதுவிடுவதாக அருளிச்செய்வதுண்டே; அங்கு எம்பெருமானார் போல்வாரான மஹாசார்யர்களையே தூதுவிடுவதாக உள்ளுறை பொருளாகையாலே அதைத் திருவுள்ளம்பற்றி ஸ்வாமியையிங்கு அன்னமாகவும் வண்டாகவுமருளிச் செய்தது மிகப்பொருத்தம். அன்னத்தின் படிகளும் வண்டின் படிகளும் ஸ்வாமிபக்கலிலே நிரூபிக்கப்படுகிறபடியைக் காணீர்;—

ஹம்ஸத்திற்குள்ள தன்மைகள் ஸ்வாமிபக்கலிலே குறையற்றிருக்கின்றன. எங்ஙனே யென்னில்; (1.) நீரையும் பாலையும் கலந்துவைத்தால் அவற்றைப் பிரிக்கவல்லமையுடையது ஹம்ஸம் என்று

பிரமாணங்களிலறிகின்றோம்; * ஹம்ஸோ யதா க்ஷீரமிவ அம்புமிச்ரம் * என்பது முதலான வசனங்கள் காண்க. இதனால் ஹம்ஸமானது ஸாராஸாரவிவேகத்தில் மிகுந்தவல்லமையுடையது என்பது தேறும். ஸ்வாமிதாமும் * அஸாரமல்பஸாரஞ் ச ஸாரம் ஸாரதரம் த்யஜேத், பஜேத் ஸாரதமம் சாஸ்த்ரே * என்றபடி ஸாராஸாரமிச்ரமாயிருந்த சாஸ்திரங்களிலே அஸாரமாயும் அல்பஸாரமாயுமுள்ளவற்றை யெடுத்துத்தள்ளி மிகவும் ஸாரமானவற்றையே கைக்கொண்டவர். பாஹ்யமதங்களையும் குத்ருஷ்டிமதங்களையும் நிரஸித்து ஸ்ரீமத்வேதமார்க்கப்ரதிஷ்டாபநாசார்யஉபய வேதாந்தப்ரவர்த்தந ப்ரவீணராயெழுந்தருளியிருந்து ரஹஸ்யார்த்தங்களில் பஹிரங்கமான அர்த்தங்களைத் தள்ளி அந்தரங்கமான அர்த்தங்களைக் கொண்டருளினவர் என்பது இங்கு விவக்ஷிதம்.

அப்படிப்பட்ட அர்த்தங்களில் ஒன்று இங்கு எடுத்துக்காட்டுவோம்:—

திருவாய்மொழி வியாக்கியானத்தில் பல விடங்களில் எம்பெருமானாருடைய நிர்வாஹமென்று விலக்ஷணமான அர்த்தங்கள் எடுத்துக்காட்டப்படுகின்றன. அவற்றுள் ஒன்று கேண்மின்; * உயர்வறவுயர்நலம் * என்கிற முதற்பாட்டினீற்றடியில் துயரறுசுடரடி என்றவிடத்திற்கு - “ அடியார்களுடைய துக்கங்களையெல்லாம் அறுக்கிற [அதாவது போக்கடிக்கிற] திருவடி ” என்று எம்பெருமானார்க்கு முன்புள்ள ஆசாரியர்கள் அருளிச்செய்தார்களாகவும், எம்பெருமானார் அப்படியன்றிக்கே [அதாவது, துயரறுக்குஞ் சுடரடியென்று கொள்ளாமல்] ‘ துயரறும் சுடரடி ’ யென்றுகொண்டு தனக்குண்டான துயரைத் தான் தவிர்த்துக்கொள்ளுந்திருவடிகளென்று பொருளருளிச்செய்ததாகவும் வியாக்கியானமுள்ளது. பூருவர்கள்பணித்த அர்த்தத்திற்காட்டிலும் ஸ்வாமிபணித்த அர்த்தத்தில் என்ன சிறப்பு? என்பதை ஆராய்ந்து அறியவேணும். எம்பெருமான் அடியார்கள் படுந்துயரைத் தீர்க்கிறானென்பது இதிஹாஸபுராணாதிகளில் தேறின அர்த்தமே அது மறுக்கத்தக்கதன்று. எம்பெருமானார் அதைத் தள்ளி வேறு பொருள் பணித்ததானது அப்பொருள் அஸம்பத்தம் என்கிற திருவுள்ளத்தினாலன்று; அதிற்காட்டிலும் மிகுந்த ஸ்வாரஸ்யம்பெற்று நெஞ்சை யுருக்கும்படியான அர்த்தம் இது-என்பதே ஸ்வாமியின் திருவுள்ளம். அடியார்கள் துயருறுங்காலத்தில் எம்பெருமான் தானும் துயருற்றிருப்பதாக இதிஹாஸங்களிலறிகின்றோம்; துயருறுவது என்பது ஹேயகுணமாயிற்றே; ஸமஸ்த கல்யாண குணாத்மகனான எம்பெருமானிடத்தில் இந்த ஹேயகுணமிருப்பதாக இசையலாமோ வென்று சங்கிப்பாருடைய சங்கையைப் போக்கிக்கொண்டே வால்மீகி பகவான் ஸ்ரீராமாயணத்தில் அயோத்யா காண்டத்தில் நகரத்து ஜனங்கள் இராமபிரானுடைய திருக்குணங்களைப் புகழ்ந்து கூறுவதாக இட்ட ஸந்தர்ப்பத்தில் *பஹவோ ந்ருப கல்யாண குணா: புத்ரஸ்ய ஸந்தி தே* என்று திருக்கல்யாணகுணங்களையே தாங்கள் தசரத சக்கரவர்த்தியிடம் எடுத்துக் கூறப்போவதாக ப்ரதிஜ்ஞை செய்வதை முன்னம் காட்டிவிட்டு, மேலே *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி துக்கித:* என்று [மனிதர்கள் துயருறுமிடத்து இராமபிரான்தான் மிகமிகத் துயருறுவதாகச்] சொல்லி இதையொரு கல்யாண குணமாக நாட்டிவைத்தார். அடியார்கள் படுந்துயரை அறுக்கிறான்பகவான் என்பது இருக்கட்டும்; அவ்வடியார்கள் துயர் தீரும்வரையில் தானும் துயருற்றவனாகவேயிருந்து அவர்கள் துயரற்ற பிறகே தானும் துயரற்றவனாகுகை என்னுமிப்பொருள் பகவத்குணாநுபவரஸிகர்களுடைய நெஞ்சையுருக்குமதாதலால் இச்சிறந்த பொருளை எம்பெருமானார் திருவுள்ளம் பற்றினாரென்க. இத்திருக்குணத்தை வால்மீகிபகவான் ஸ்ரீ ராமாயணத்தில் ஓரிடத்திலன்று, பலவிடங்களிலும் மூதலிக்கிறபடி காணீர்;* அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம், க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ * (ஸம்க்ஷேபரா-185.) என்ற ச்லோகத்தில் விஜ்வர: என்கிறபதம் உயிரானது; விபீஷணாழ்வான் துயர்தீர்ந்து முடிசூடும்வரையில் பெருமாள்தாம் துயருற்றிருந்ததாகவும் அவனை முடிசூட்டியே தாம் துயர்தீரப்பெற்றதாகவும் நன்கு விளக்குகின்றதன்றோ விஜ்வர: என்னுமிப்பதம். இப்படிப்பட்ட ஸாரப்பொருள்களை விவேகித்து வெளியிடுவதனால் ஸ்வாமி ஹம்ஸமென்னத்தகுந்தவர்.

2. இன்னமும், சாந்தோக்ய உபநிஷத்தில் ஜாநச்ருதியின் உபாக்கியானமொன்று ஓதப்பட்டிரா நின்றது. ஜாநச்ருதியென்கிற க்ஷத்ரியன் மிக்க பெருஞ்செல்வம் படைத்தவனாகையாலே அன்னதானம் முதலியன விசேஷமாகச் செய்து கொண்டிருந்தான். ஆனால் அவனுக்கு ப்ரஹ்மஜ்ஞானமென்பது சிறிதுமில்லாமலிருந்து பல்லபல்லாக்ஷ ரென்கிற இரண்டு மஹரிஷிகள் அவனிடத்திலே இரக்கங்கொண்டு இவனுக்கு ப்ரஹ்மஜ்ஞானத்தையுண்டாக்கவேணுமென்றெண்ணி இரண்டு ஹம்ஸரூபிகளாய் அவன்மேலே பறந்துகொண்டு போகையில் பல்ல னென்கிற ஹம்ஸம் பல்லாக்ஷ னென்கிற ஹம்ஸத்தைப்பார்த்து 'ஜாநச்ருதிமஹாப்ரபுவின் மேலே நிழல் படாதபடி கவனித்துப்போ' என்று சொல்லிற்று. அது கேட்ட அந்த ஹம்ஸம், "இவன்மேல் நிழல் பட்டாலென்ன? அதனாலென்ன கெடுதல்? இவன் ரைக்வரைப்போல் ப்ரஹ்மஜ்ஞாநியா என்ன? ஞானஹீநனானவிவனை நாம் கௌரவிக்கவேணுமோ?" என்று அவஹேளனமாகச் சொல்லிற்று. அதைக்கேட்ட ஜாநச்ருதி துக்கங்கொண்டவனாய் அந்த ரைக்வரைத் தேடிச்சென்று அநுவர்த்தித்து ப்ரஹ்மவித்யையை உபதேசிக்கவேணுமென்று பிரார்த்தித்து அவரிடத்தில் உபதேசம் பெற்றானென்பது அவ்வுபாக்கியானத்தின் ஸாரம். இக்கதையின்படி ப்ரஹ்மஜ்ஞான ப்ராப்திக்கு ஹம்ஸம் ப்ரேரகமானதுபோல எம்பெருமானார்தாமும் அதற்கு ப்ரேரகர் என்பது அறியத்தக்கது. "பாருலகிலாசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறுமென்று பேசிவரம்பறுத்தார்பின்" என்று உபதேசரத்தினமாலையிலருளிச் செய்தபடி ஸ்வாமி நியமனம் தந்தருளாவிடின் இவ்வுலகில் ப்ரஹ்மஜ்ஞானப்ரசாரத்திற்கு வழியேயில்லையாமன்றோ

3. எம்பெருமான் வேதசாஸ்திரங்களை வெளியிடத் திருவுள்ளம்பற்றியபோது ஹம்ஸரூபத்தைப் பரிக்ரஹித்தருளினதாக சாஸ்த்ரங்களினாலறிகிறோம்; * அன்னமாய் நூல்பயந்தான் * என்றும் * அன்னமதாயிருந்து அங்கு அறநூலுரைத்த * என்றும் ஆழ்வார்களுமருளிச் செய்கிறார்கள். சாஸ்த்ரோபதேசத்திற்கு ஹம்ஸமாயிருத்தல் அவசியமாயினபடியாலே சாஸ்த்ரங்களை யுபதேசித்தவர்களில் தலைவரான எம்பெருமானாரை ஹம்ஸமென்றது பொருத்தமே.

4. ஹம்ஸத்தினுடைய இயல்வைச் சொல்லுமவர்கள் * ந பத்நாதி ரதிம் ஹம்ஸ: கதாசித் கர்தமாம்பஸி * என்கிறார்கள்; அதாவது ஹம்ஸம் ஒருகாலும் சேற்று நீரில் கால்பொருந்ாதென்றபடி. அப்படியேயன்றோ எம்பெருமானார் படியும். திருவிருத்தத்தின் முடிவு பாசுரத்தில் "அழுந்தார் பிறப்பாம் பொல்லாவருவினை மாயவன் சேற்றள்ளல் பொய்ந்நிலத்தே" என்று இந்த ஸம்ஸாரநிலமே சேற்றுநிலமாகச் சொல்லப்பட்டுள்ளது; இதில் கால் பொருந்ாதவர்களில் தலைவராயிற்று எம்பெருமானார்.

5. திவ்ய தேசங்களை வருணிக்கும்போது ஆழ்வார்கள் அன்னம் மாதர்களின் நடையைப் பின் சென்று நடப்பதாகக் கூறுகிறார்கள்; * பெடையோடன்னம் பெய்வளையார்தம் பின் சென்று நடையோடியலி * என்று திருமங்கையாழ்வார் திருநறையூர்ப்பதிகமொன்றில் கூறியுள்ளது காண்க. ஸ்வாமிதாமும் * அன்னநடையவணங்கான பிராட்டியினுடைய நடையைப் பின் செல்பவர். (அதாவது-) பிராட்டியின் நடையாவது நடத்தை; சேதநர்களைக்குறித்து எம்பெருமானிடத்தில் மன்றாடிப் பேறு பெறுவிப்பதே பிராட்டியினுடைய முக்கியமான நடத்தையாகும். அதை ஸ்வாமிதாம் அநுசரிக்கையாவது-தாமும் அப்படியே எம்பெருமானிடத்தில் மன்றாடி இன்றிருக்கும் நம்போல்வார்க்கும் பேறு பெறுவித்ததேயாம். இவ்விஷயத்தை ஸ்ரீமத் வேதாந்ததேசிகன் ந்யாஸதிலகத்தில் * உக்த்யா தநஞ்ஜய!விபீஷண லக்ஷ்யயா தே ப்ரத்யாய்ய லக்ஷ்மணமுநேர் பவதா விதீர்ணம், ச்ருத்வா வரம் * என்றச்லோகத்தினாலும், மணவாளமாமுனிகள் யதிராஜ விம்சதியில் * காலத்ரயேபி...........க்ஷேமஸ் ஸ ஏவ ஹி யதீந்த்ர, பவச்ச்ரிதாநாம் * என்றச்லோகத்தினாலும் வெளியிட்டருளினார்கள். அவற்றின் வியாக்கியானங்களிலே விரியவுரைத்தோம், கண்டு கொள்வது. பொதுவாகவே ஆசார்யர்களின் புருஷகாரமில்லாமல் எம்பெருமான் பேறுதரமாட்டானென்பதை * தத்தே ரங்கீ நிஜமபி பதம் தேசிகாதேச காங்க்ஷீ * (ந்யாஸதிலகே)

என்ற ஸ்ரீஸூக்தியினால் கல்வெட்டாக வருளிச்செய்தார். எம்பெருமானார்க்கு இது விசேஷ நிரூபகமென்றுணர்க.

இங்ஙனே மற்றும் பலவகையான பொருத்தங்களும் உய்த்துணர்க.

இனி "ஸ்ரீமத் பராங்குச பதாம்புஜப்ருங்கராஜம்" என்று வண்டாக அருளிச்செய்ததன் பொருத்தங்களை நிரூபிப்போம்.

1 வண்டு மதுவ்ரத மென்று பேர்பெற்றிருக்கும். தேன்தவிர வேறொன்றைக் கொள்ளாது என்றபடி. அதுபோல, * உளங்கனிந்திருக்குமடியவர்தங்களுள்ளத்தூறிய தேன் * என்றும் * தேனை நன்பாலைக் கன்னலையமுதை * என்றும் * எனக்குத் தேனே, பாலே கன்னலே, யமுதே * என்றும் பல விடங்களிலும் தேனாகச் சொல்லப்பட்ட எம்பெருமானையே விரும்பி மற்றொன்றைக் கண்ணெடுத்துப் பாராமல் பகவதநுபவத்தையே விரதமாகக்கொண்டிருந்தவர் எம்பெருமானார்.

2. * வண்டினங்கள் காமரங்களிசைபாடும் * என்று குலசேகராழ்வாரும், * யாழினிசை வண்டினங்கள் ஆளம் வைக்கும் * என்று பெரியாழ்வாரும், * வரிவண்டுதேதெனவென் றிசைபாடும் * என்று திருமங்கையாழ்வாரும் இப்படி மற்றும் பலரும் பணித்தபடியே யாழினிசை போன்ற இசைகளைப் பாடுவதையே இயல்வாகவுடையதாயிருக்கும் வண்டு; ஸ்வாமிதாமும் * யாழினிசை வேதத்தியல் * பண்ணார் பாடலாயிரம் * என்னப்பட்ட திருவாய்மொழி முதலிய திவ்வியப்பிரபந்தங்களின் கானத்தையே போதுபோக்காகவுடையராயிருந்தவர். "தமிழ் மறைகளாயிரமும்-மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்" "பண்டருமாறன் பசுந்தமிழானந்தம் பாய்மதமாய் விண்டிடவெங்களிராமானுசமுனிவேழம்" என்றவைகாண்க.

3. வண்டு வடமொழியில் சஞ்சரீக மென்று பேர்பெற்றிருக்கும்; ஓரிடத்தில் தங்கியிராது; மதுவுள்ளவிடமெங்கும் பறந்து திரியுமது. அதுபோல ஸ்வாமிதாமும் * ஸ்ரீரங்கம் கரிசைலமஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலௌ ஸ்ரீகூர்மம் புருஷோத்தமஞ் ச பதரீநாராயணம் நைமிசம், ஸ்ரீமத்த்வாரவதீ ப்ரயாக மதுராயோத்யா கயா: புஷ்கரம் ஸாலக்ராமகிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம் முநி: * என்கிறபடியே *பதியேபரவித்தொழுந்தொண்டர்களில் தலைவராயிருந்தார்.

4. வண்டு எந்த ஸமயத்தில் எங்குச் செல்லவேணுமென்று நினைத்தாலும் தட்டுத் தடங்கலின்றியே புகுந்து ரமிக்கும்; ஸன்னிதிகளில் கர்ப்பக்ருஹங்களினுள்ளும் எம்பெருமான் திருமுடிமீதும் தாராளமாகப் புகக்காணுகின்றோம். அதுபோல, * பின்னிட்ட சடையானும் பிரமனுமிந்திரனும் துன்னிட்டுப்புகலரிய * என்னும்படி திருவாசல்களிலே ஸேவாபரரானவர்கள் நிறைந்து தலை நுழைக்கவொண்ணாதபடி நெருக்க, *மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடுநாள் * என்னும்படியவதரித்தருளின எம்பெருமானார் கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான எந்த திவ்யதேசங்களிலும் தடையும் சங்கையுமொன்றுமின்றிக்கே அதிகாரச் செல்வத்துடனே உள்ளே புகுந்து ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்து வாழ்ந்தவர் காண்மின்.

5. வண்டு சோலைகளிலேயே சுழலமிடும்; எம்பெருமானார்தாமும் * ஆராமஞ் சூழ்ந்தவரங்கம் * சிந்துபூ மகிழுந்திருவேங்கடம் * விரையார்பொழில் வேங்கடம் * என்னும்படியாகச் சோலைகள்மிக்க தலங்களிலேயே சுழலமிட்டவர். இப்படி மற்றும் பல பொருத்தங்கள் காண்க.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஸ்ரீ ஸீதாலக்ஷ்மண பரத சத்ருக்ந ஹநுமத்ஸமேத ஸ்ரீ ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

# உபயராமாயண கதாஸாரம்.

ஸ்ரீ காஞ்சீ. ப்ர. அண்ணங்கராசாரியர்.

## — முன்னுரை —

இங்கு உபயராமாயணமென்றது ஸ்ரீ வால்மீகி ராமாயணத்தையும் கம்பராமாயணத்தையும். ஸ்ரீ ராமபிரானது திவ்யசரிதையைத் தெரிவிக்கவல்ல ராமாயணங்கள் பல இருந்தாலும் இவையிரண்டு ராமாயணங்களே நமது தமிழ் நாட்டில் பெரும்பான்மையாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன. இவை கதைகளைத்தெரிவிப்பதற்காக மாத்திரமே தோன்றியவையல்ல. இவற்றின் சொல்லின்பமும் பொருளின்பமும் அந்தந்த பாஷையின் நரம்புகளை யறிந்தவர்கள் ஆழ்ந்து ரஸிக்கக் கூடியவை. ஆனாலும் கதையின் போக்கை யறிவதற்குப் பலரும் குதூஹலம் கொள்ளுகிறபடியால் கதையின் ஸாரத்தை மாத்திரம் எடுத்துத் தொகுத்து உலகுக்கு உதவ விரும்புகின்றோம். கம்பர் தாம் இராமாயணமியற்றியது வான்மீகி ராமாயணத்தைத் தழுவியே யென்பதைத் தாமே கூறியுள்ளார்—“தேவபாடையினிக்கதை செய்தவர் மூவரானவர் தம்முளும் முந்தியநாவினாருரையின்படி நான் தமிழ்ப் பாவினாலிது பாடிய பண்பரோ” என்ற செய்யுளினால். ஆனாலும் சில பல விடங்களில் கதைவேற்றுமை காணப்படுகின்றது. அவ்வேற்றுமையை யறிவதற்கும் பாங்காக ஒவ்வொரு கட்டமாக எடுத்துக்கொண்டு வால்மீகி ராமாயண ப்ரக்ரியையையும் கம்பராமாயண ப்ரக்ரியையையும் கதை சிறிதும் விடாமலெழுதி மேலுங் கீழுமாகப் பதிப்பிக்கிறபடியிது:

*ஸ்ரீமத். வால்மீகி ராமாயணத்தின் பாலகாண்டத்தில் முதல்ஸர்க்கம்—ஸம்க்ஷேபராமாயணம்.*

| | |
|---|---|
| 2. *வால்மீகியை நான்முகன் அநுக்ரஹித்தல்.* | 5. *தசரத சக்ரவர்த்தியின் வாழ்வு கூறல்.* |
| 3. *ராமாயண விஷய ஸங்க்ரஹம்.* | 6. *தசரதனது பெருமை கூறல்.* |
| 4. *குசலவர்களுக்கு ராமாயணோபதேசம்.* | 7. *தசரத மந்திரி முதலானோர் சிறப்பு கூறல்.* |

*இனி, எட்டாவது ஸர்க்கத்தில்தான் தசரதனது புத்ரகாமேஷ்டி முயற்சி கூறத் தொடங்கினது. அதுமுதலாகவே இங்குக் கதையெழுதப் படுகின்றது.*

## வால்மீகி காட்டிய ராமாவதாரம்.

*தசரத மன்னவன் தனக்குப் புத்திரனுண்டாக வேண்டி வெகு நாளாகத் தவஞ்செய்து புதல்வனுண்டாகாமையால் தனக்குள் சிந்தித்துக் கொண்டிருக்கையில் “பிள்ளை பிறக்கும் பொருட்டு அசுவமேதயாகஞ் செய்யவேணும்” என்று ஒரெண்ணமுண்டாகி*

---

## கம்பராமாயணப்பகுதி.

கம்பர் தமது இராமாயணத்தில் பாலகாண்டத்தில் முதலாவதான ஆற்றுப்படலத்தினால் ஸரயூநதியின் வளங்களையும், இரண்டாவதான நாட்டுப்படலத்தினால் அந் நதி பாயப்பெற்ற கோசல நாட்டின் வளப்பத்தையும், மூன்றாவதான நகரப்படலத்தினால் அந்தக் கோசல நாட்டின் தலைநகரும் இராமபிரானது திருவவதார ஸ்தலமுமான அயோத்யா நகரத்தின் சிறப்புக்களையும், நான்காவதான அரசியற் படலத்தினால் அவ்வயோத்தி நகரத்தரசனாகிய தசரத மன்னவனது அரசாட்சிப் பெருமையையுஞ் சொல்லி முடித்திட்டு, ஐந்தாவதான திருவவதாரப் படலத்தினால் திருமால் இராமன் முதலிய நான்கு திருமேனியுடனே அத்தசரத சக்ரவர்த்திக்குப் புதல்வனாகத் தோன்றினமையைக் கூறுகின்றார். அவ்வவதார கெட்டம் முதலாக இங்கு எழுதப்படுகின்றது.

## கம்பர் காட்டிய ராமாவதாரம்

*உலகம் முழுதினையும் ஊக்கத்துடன் ஆண்டு ஒப்பில் புகழ்படைத்து விளங்கும் தயரத மன்னவன் ஒரு நாள் தன் குலகுருவான வஸிஷ்டமஹாமுனியைத் தொழுது, “ முனிவர் பெருமானே ! என் முன்னோர்களும் யானும் இவ்வுலகத்தை மிக்க புகழுடன் ஆட்சி*

—வால்மீகி ராமாயணம்—

மந்திரிகளில் தலைவனாகிய சுமந்திரனைப்பார்த்து "நீ போய் எனது குருக்கள் புரோஹிதர்கள் யாவரையும் விரைவில் அழைத்துக் கொண்டு வருக" என்றனன். அதைக் கேட்ட சுமந்திரன் விரைவாகச் சென்று ஸுயஜ்ஞர், வாமதேவர், ஜாபாலி, காச்யபர், குலகுருவாகிய வஸிஷ்டர், மற்றுமுள்ள உயர்ந்த அந்தணர்கள் ஆகிய அனைவரையும் கூட்டி அரசன் மாளிகைக்கு அழைத்துக்கொண்டு வந்தனன். மன்னவன் அவர்களனைவரையும் பூசித்து அவர்களை நோக்கி, "பெரியீர்! மக்களைப் பெறவேண்டி மனங்கலங்கிப் புலம்புகின்ற எனக்கு அசுவமேதயாகஞ் செய்ய விருப்ப முண்டாயிருக்கிறது. இதை நீங்கள் இனிதாக நிறைவேற்றியருளவேண்டும்" என்ன, முனிவர்கள் தசரதனை நோக்கி மிகுந்த களிப்புடன் 'யாகத்திற்கு வேண்டிய பொருள்களைச் சேகரிப்பாயாக. மக்களைப் பெறவேண்டியதற்காக உனக்கு இந்தத் தருமபுத்தி யுண்டானபடியால் எவ்விதத்திலும் நீ வேண்டின புதல்வர்களைப் பெறுவாய்' என்று மொழிந்தனர். அரசனும் அவ்வந்தணர் மொழியைக்கேட்டு மகிழ்ந்து மந்திரிகளைப் பார்த்து "எனது குருக்கள் சொன்ன சொற்படி எல்லாப் பொருள்களையும் சேர்ப்பீர்களாக. மிக்க வல்லமையுள்ள நீங்கள் இந்த யாகம் நெறிமுறை தவறாது முடியும்படி முயல்வீர்களாக" என்றனன். மந்திரிகளெல்லோரும் 'அப்படியே செய்கின்றோம்' என்றனர். பிறகு அவ்வரசன் தனது மாளிகையைச் சேர்ந்து கௌஸல்யை முதலிய தன் மனைவிகளைப் பார்த்து 'நான் மகப்பேற்றிற்கு யாகஞ் செய்யப்போகிறேன்; நீங்கள் தீக்ஷை கொள்ளவேண்டும்' என்றுரைத்தனன். அவர்கள் அவ்வார்த்தை கேட்டு ஆனந்தக்கடலிலாழ்ந்தவராயினர். அச்வமேதயாகம் செய்யவிரும்பிய அவ்வரசனைப் பார்த்துச் சுமந்திரர் தனிமையிற் சொல்லுகிறார்;—[அது மேல்வருமாறு—]

அரசர்க்கரசே! நீர் இவ்வேள்வி செய்வதைப்பற்றி நான் ஒரு இதிஹாஸம் முன்னமே கேட்டிருக்கிறேன். ஸநத்குமாரர் உமக்கு மக்கள் உண்டாகும் விதத்தைக் குறித்து முனிவர்களின் முன்னிலையில் முன்னமே சொல்லியிருந்தனர். அது கேளீர்: காச்யபருக்கு விபண்டகரென்று பேர் பெற்ற ஓர் புத்திரர் உண்டு. அவருக்கு ருச்யச்ருங்க [கலைக் கோட்டு முனிவ] ரென்ற புதல்வர் உண்டாவர். அவர் காட்டிலேயே வளர்ந்து பிதாவுக்குப் பணிவிடைசெய்துகொண்டு முனியாகி அக்கானகத்திலேயே திரிந்துகொண்டிருப்பர். ரோமபாதனென்பவன் அங்கதேசத்துக்கு அரசனாகிப் புகழ்பெற்று விளங்குவான். அம்மன்னவன் நீதிநெறி தவறுதலால் அவனது நாட்டில் வெகு காலம் மிகக் கொடிய பஞ்சம்

—கம்பராமாயணம்—

புரிவது உமது திருவருளினாலேயே; அறுபதினாயிரமாண்டு யாதொரு குறைவுமின்றி யான் அரசாண்டும் என் காலத்திற்குப்பிறகு இந்த ராஜ்யத்தை யாளுதற்குச் சந்ததியில்லையென்ற ஒரு குறைமாத்திரம் என் மனத்தை மிக வருத்துகின்றது; முனிவர்களும் அந்தணாளர்களும் இதுகாறும்போலவே இனிமேலும் குறையற வாழவேண்டுமாயின் எனக்கொரு புதல்வனிருக்க வேண்டியது அவசியமல்லவா? என்று விண்ணப்பஞ் செய்தனன்.

அது கேட்ட வசிட்டமுனிவன் அவ்வரசனது குறையைத் தீர்ப்பதற்கு என்ன செய்யலாமென்று ஆலோசிக்கையில், தேவர்கட்குத் திருமால் அபயமளித்த விருத்தாந்தம் நினைவிற்கு வரவே அதனைச் சொல்லத் தொடங்கினன். மன்னவனே! கீழே நடந்திருப்பதொரு செய்தியைச் சொல்லுகிறேன் கேளாய்; இந்திரன் முதலிய தேவர்கள் அரக்கர்களால் மிகவும் வருந்திச் சிவபெருமானை யடைந்து தங்கள் கஷ்டங்களை முறையிட, அக்கங்காதரக்கடவுள் அரக்கரையழிக்க எம்மாலாகாதென்று சொல்லி அத்தேவர்களுடனே பிரம

—வால்மீகி ராமாயணம்—

நேரிடும். அப்பொழுது அவன் மிக்க வருத்தங் கொண்டு அந்தணர்களை வரவழைத்து மழை யின்மையாகிய இப்பஞ்சத்திற்கு மூலமான எனது பாபம் தொலையும்படி தக்க நியமங்களை எப்படி அநுஷ்டிக்கவேண்டுமோ, அதை எனக்குத் தெரிவிக்க வேண்டும்” என்று வினவப் போகின்றனன். அவ்வந்தணர்களும் அம்மன்னனைப் பார்த்து ‘ருச்யச்ருங்க மாமுனியை எவ்விதத்திலாவது இங்கு வரச்செய்து பூஜிப்பாயாகில் இக்கொடிய வறுமை விலகும்; அவர்க்கு நீ உனது மகளான சாந்தையை மணம் புரிவித்துக் கொடுப்பாயாக’ என்று மொழியப் போகின்றனர். ரோமபாதனும் அவர்களது மொழியைக் கேட்டு, பிரமசரியந்தவறுதிருக்கும் அம்முனியை இங்கு வரவழைக்கும் வழி யாதோவென்று சிந்தித்து மந்திரிகளுடன் கலந்து புரோகிதர்களையும் மந்திரிகளையும் ஸத்கரித்து அங்கிருந்து ருச்யச்ருங்கரை யழைத்துக்கொண்டு வரும்படி நியமிக்கப் போகின்றனன். அவர்களும் மன்னவனது வார்த்தையைக் கேட்டு வருத்தமுற்றுத் தலைவணங்கிக்கொண்டு ‘பிரானே! விபண்டக ரிஷிக்கு நாங்கள் மிகவும் அஞ்சுகின்றோம். அவரிடம் எங்களால் போக முடியாது. ஆயினும் ருச்யச்ருங்க முனிவரை வரவழைக்கும் உபாயங்களை விசாரித்துச்சொல்லுகிறோம்’ என்று அரசனுக்கு நல்வார்த்தை சொல்லப்போகிறார்கள்; பின்பு அவர்கள் அம்முனிவரை அழைத்துக்கொண்டு வரத்தக்க உபாயங்களை ஆலோசித்து, அழகிய வேசிகளை இனிமையான தின்பண்டங்களுடன் அவருடைய ஆச்ரமத்திற்கு அனுப்பி அம்மங்கையர் மூலமாக அம்முனிவரை வரவழைப்பதென்று தீர்மானித்துக்கொண்டு ‘மன்னனே! நாங்கள் இவ்வுபாயத்தால் அவ்வந்தணரை வரவழைப்போம். இதனால் அவரது பிரமசரியத்திற்கு யாதொரு தோஷமும் உண்டாகாது. விபண்டகரைப் பற்றியும் யாதொரு பயமும் நேரிடாது. நமது நாட்டில் பஞ்சப்பிணியும் நீங்கும்’ என்று அவ்வரசனுக்குச் சொல்லப்போகின்றனர். அப்படியே ருச்யச்ருங்க முனிவர் வேசிகளின் ஸதுபாயத்தினால் அங்க தேசத்திற்கு வந்து சேர்ந்து ராஜ்ய க்ஷேமத்தை விளைவிக்கப் போகின்றனர். அன்றியும், இக்ஷ்வாகு வம்சத்தில் தசரதனென்னும் ஓர் மன்னவன் தருமத்திற் சிறந்திருக்கப் போகின்றனன். அவ்வரசன் அங்க தேசத்தரசனிடம் சென்று தான் புத்ரகாமேஷ்டி செய்ய விரும்பியிருப்பதை யறிவித்து அதை நன்கு நிறைவேற்றுதற்காக ருச்யச்ருங்க மாமுனிவரைத் தனது நகரத்திற்கு அனுப்புமாறு விரும்பப் போகின்றனன். அவ்வரசனும் அவரைத் தசரதனுடன் அனுப்பப் போகின்றனன். அத்தசரத மன்னவனும் அவ்வந்தணரையழைத்து வந்து அவரால் தான் விரும்பின புத்திரகாமேஷ்டியை நிறைவேற்றி நான்கு புதல்வர்களைப்பெறப்போகின்றனன்” என ஸநத்குமாரர் முன்னமேமொழிந்திருக்கின்றார்.

—கம்பராமாயணம்—

னுள்ளவிடத்தே சென்றனன். சென்று பிரமனை யடிதொழுது தேவர்கட்கு அரக்கர்களால் நேர்ந்துள்ள துன்பத்தைக் கூறினன்; ‘அரக்கர் தலைவனான இராவணனை யொழிப்பது நம்மால் முடியாத காரியம்; திருமால்தான் தனது கருணையினால் அவனைத் தொலைக்க வேண்டும்’ என்பதுதான் அங்கு முடிவு செய்யப்பட்டது. உடனே அவர்கள் திருமாலை மனத்தினால் சிந்திக்க, அப்பெருமான் திருமகளோடு கருடன்மீதேறி வந்து அத்தேவர்கட்கு முன்னே காட்சி தந்தருளினன். இப்படி, நினைத்தமாத்திரத்திலேயே வந்து சேவை தந்தருளியதனால் அப்பெருமானால் தமது குறை விரைவில் முடியுமென்று பெருமகிழ்ச்சிகொண்ட தேவர்கள் ஆடியும் பாடியும் நிற்க, திருமால் கருடனினின்று இறங்கி அங்குள்ளதொரு மண்டபத்தே இடப்பட்ட செம்பொற்சிங்காசனத்தின்மேல் வீற்றிருந்தனன்.

—வால்மீகி ராமாயணம்—

என்றிங்ஙனம் ஸுமந்திரன் சொல்லக் கேட்ட தயரதன் "அந்த ரிச்யச்ருங்க முனிவர் அங்கதேசத்திற்கு வந்து சேர்ந்தாரா? எவ்வுபாயத்தினுல் வரவழைக்கப்பட்டார்? அதைச்சொல்ல வேணும்" என்ன, மீண்டும் ஸுமந்திரர் சொல்லுகிறுர்;

அவ்வண்ணமாகவே ரோமபாதராஜ நகரத்தில்நின்றும் சில வேசிகள் இனிய பக்ஷணங்களுடன் புறப்பட்டுக் கலைக்கோட்டு முனிவரது வனத்திற் சென்று அவரருகில் அணுகுவதற்கு அஞ்சி எங்ஙனம் அவரைக் கிட்டலாமென்று ஆலோசித்திருந்தனர். அவரோ எப்போதும தந்தைக்குப் பணிவிடை செய்துகொண்டு ஆச்ரமத்தை விட்டு ஒரு நொடிப் பொழுதும் வெளிப்புறப்படாதவராய், அத்தந்தை யொருவர் தவிர வேறொரு ஆணையும் பெண்ணையும் கண்ணுலுங் காணுதவராய் வாழ்ந்திருந்தனர்; அன்னவர் ஒருநாள் தைவவசமாய் அந்த வேசிகளிருக்கு மிடத்தே வந்து அவர்களோடு இனிமையாகப் பேசித் தன்னைப் பற்றியும் நன்கு தெரிவித்து, அவர்களைத் தன் ஆச்ரமத்திற்குள் வெகு குதூஹலத்தோடு அழைத்துச் சென்று பலபல உபசாரங்களைச் செய்தனர். வேசிகளும் அவரை ஆரத்தழுவி, தாங்கள் கொண்டுவந்த பக்ஷணங்களையும் அவர்க்குத் தந்திட; அவரும் அவற்றை வாங்கி அருந்தி அதிசயித்து மகிழ்ந்தார்.

—கம்ப ராமாயணம்—

எல்லாத்தேவர்களும் அத்திருமாலை வணங்கி அரக்கரால் தமக்கு நேர்ந்துள்ள கொடுமையைக் கூறத் தொடங்கி 'விண்ணவரும் மண்ணவருமியற்றும் நற்கருமங்களுக்கெல்லாம் அரக்கர் மிகுந்த இடையூறு இழைக்கின்றுராதலால் தேவரீர் அவர்களைத் தொலைத்திடாவிடின் எங்களாற் பிழைத்திருக்க முடியாது' என்று முறையிட்டனர். அவர்களுள் பரமசிவன் "செங்கண்மாலே! நாங்கள் அறியாது அரக்கர்கட்கு வரங் கொடுத்ததனுல் உலகங்கட்கெல்லாம் அளவற்ற தீம்பு உண்டாயிற்று; இவ்வுலகங்கட்கெல்லாம் தேவரீரே தலைவராதலால் அதனைத் தீர்த்து உலகத்தைக் காக்கவேண்டுவது உமது கடமையேயாகும்; இனிச் சிறிதுபோது தாமதித்திருந்தாலும் அவர்களால் உலகமெல்லாம் அழிந்திடும்" என்று விசேஷித்துக் கூறினன்.

அவற்றைச் செவிதாழ்த்திக் கேட்ட திருமால் அவர்களை நோக்கி 'இனி நீங்கள் சிறிதும் வருந்த வேண்டா; உங்கள் துன்பங்களைத் தீர்த்து இன்ப மளிப்பேன் யான்; அச்சம் நீங்கி வாழ்மின்; எனது சங்கு சக்கரங்களும் திருவனந்தாழ்வானும் எனக்குத் தம்பிகளாய் அமைய, நான் அயோத்தியில் தசரத சக்கரவர்த்திக்குப் புதல்வனுய்ப் பிறந்து அரக்கரது வரத்தையும் வாழ்வையும் ஒழிப்பேன்; நீங்கள் பூமியில் வானரங்களாகப் பிறந்திடுமின்! என்று சோதிவாய் திறந்து பணித்தனன். அது கேட்டுத் தேவர்கள் மிக மகிழ்ச்சிகொள்ள, திருமால் கருடன்மீதேறி யெழுந்தருளியாயிற்று. பிறகு நான்முகக் கடவுள் தேவர்களை நோக்கி "கரடிகளிற் சிறந்துள்ள ஜாம்பவான் முன்னமே எனது அமிசமாகத் தோன்றியுள்ளான்; திருமால் நியமித்தபடியே நீங்களெல்லீரும் போய் வானர வீரர்களாக அவதரித்திடுமின்' என்று கூறினன். பிறகு இந்திரன் சூரியன் அக்னி என்பவர்கள் வாலியையும் சுக்ரீவனையும் அங்கதனையும் தனது அமிசமாகக் கூறினர். வாயுவும் ருத்ரனும் அனுமானைத் தமது அமிசமாகக் கூறினர். மற்றைத் தேவர்கள் நாங்களும் குரங்குகளாகப் பிறக்க மனவுறுதி கொண்டோமென்று சொல்லிப் போயினர், இதுநிற்க.

—வால்மீகி ராமாயணம்—

பிறகு இம்மடந்தையர் அக் கலைக்கோட்டு முனிவரைத் தங்களிடம் மிகவும் ஈடுபடுத்தி அவருடன் கூடவே ஊருக்குத் திரும்பினர். அம்முனிவர் அங்கதேசத்தில் அடிவைத்த வுடனே மிக்க மழைபெய்து பஞ்சம் நீங்கியது. ரோமபாத ராஜனும் அவர்க்குப் பல உபசாரங்களைச் செய்து, தன் மகளான சாந்தையை விதிப்படி விவாஹம் செய்து கொடுத்தனன். அவர் இப்பொழுது அந்நகரில் மனைவியுடன் வாழ்ந்து கொண்டிராநின்றார். ஆகையால் நீரே நேரில் சென்று அம்முனிவரை அழைத்துக் கொண்டுவர வேண்டும் என்று ஸுமந்திரர் மொழிந்தனர்.

அதைக் கேட்ட தசரதனும் 'நமது குலத்திற்கு வஸிஷ்டர் புரோஹிதர்; அவரை நீக்கி ருச்யச்ருங்கரைப் புரோஹிதராக விரும்புவது நேர்மையன்று. நாமாகச் செய்யாமல் ஸநத்குமாரர் சொன்ன விருத்தாந்தத்தைப்பற்றி அவரை வரித்தாலும் வஸிஷ்டருக்குத் தெரிவித்து அவரிடம் அநுமதி பெற்றுக்கொண்டு செய்வதே நலம்' என்றெண்ணி வஸிஷ்டரிடத்தில் ஸுமந்திரரைக்கொண்டு அக்கதையைச் சொல்லுவித்து அநுமதி பெற்றுக் கொண்டனன். பின்பு ருச்யச்ருங்கரை அழைத்துக்கொண்டு வருவதற்காகத் தனது அந்தப்புரஸ்த்ரீகளுடனும், மந்திரி முதலான பரிவாரங்களுடனுங்கூட அந்த ருச்யச்ருங்கரிருக்கிற ரோமபாத ராஜனுடைய நகரத்திற்குப் புறப்பட்டுச் சென்றனன்.

பின்பு ரோமபாதனும் தனக்கு நண்பனான தசரதனை வரவேற்று, ரிச்யச்ருங்கரிடத்திலும் சிறப்பாகத் தெரிவித்து அவரைக் கொண்டும் ஸத்காரம் செய்வித்துக் கொண்டிருந்தனன். இப்படித் தசரதன் அங்கு ஏழெட்டு தினங்களிருந்து பின் அவ்வரசனைப் பார்த்து, 'மன்னவ! உன் பெண்ணாகிய சாந்தை பர்த்தாவுடன் எனது பட்டினத்திற்கு வரவேண்டுகிறேன். அவர்களால் நடக்கவேண்டிய காரியமொன்று பெரிதாக நேரிட்டிருக்கின்றது' என்று சொல்ல, அவனும் அப்படியே அங்கீகரித்தனன். பிறகு அரசர்களின் விருப்பத்திற்கிணங்க ருச்யச்ருங்கர் தம் மனைவியுடன் அயோத்திக்குப் புறப்பட்டனர்.

தசரதனும் ரோமபாதனிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டு, 'அயோத்தி நகரமெங்கும் கொடிகளும் தோரணங்களும் கட்டி அலங்கரிக்கவேண்டும்' என்று நகர

—கம்பராமாயணம்—

ஸ்ரீமந் நாராயணமூர்த்தி அரக்கர்களை யழித்தற் பொருட்டுத் தசரத மன்னவனுக்குப் புதல்வனாகப் பிறக்கப் போவதை மனத்திலெண்ணிய வஸிஷ்ட முனிவன், யாகஞ் செய்தால் அந்த வியாஜத்தினால் திருமால் திருவவதரிப்ப னென்ற வுறுதியினால், 'மன்னவா! நீ ஏழேழ் பூதலங்காக்கவல்ல புதல்வரைப் பெறுவிக்கும் வேள்வி யொன்றைச் செய்து முடித்தல் நலம்' என்று அரசனை நோக்கிக் கூறினன். மன்னவன் அது கேட்டு மகிழ்ந்து யாகத்திற்குத் தான் செய்யவேண்டுவதை வினவிநிற்க, அதற்கு முனிவன் கூறுகின்றான்— 'காசியபனுக்குப் புதல்வன், விபண்டகனென்னும் முனிவனுளன், அவனது புத்திரன் ருசியசிருங்கன் (கலைக்கோட்டு முனிவன்) என்று பேர்பெற்றவன். அவன் மனிதர்களையே பாராமல் தபோவனத்திலேயே தன் தந்தைக்குப் பணிவிடை செய்துகொண் டிருந்துவிட்டதனால் நாடு நகரங்களில் வாழ்கின்ற மானிடரை விலங்குகள்போலுமென்று நினைப்பவன், ஸகல சாஸ்திரங்களிலும் வல்லவன், மஹா தபஸ்வி; பிரமருத்திரரும் புகழும் பொறுமை வாய்ந்தவன்; அந்த முனிவன் வந்து யாகத்தை முற்றுவித்தால் நீ கருதியபடி புத்திரர் பிறப்பர்' என்றனர்.

—வால்மீகி ராமாயணம்—

மக்களுக்குக் கட்டளையிட்டுத் தூதர்களை அனுப்பினன். பின்பு மன்னவன் அவ்வந்தணரை அழைத்துக்கொண்டு சங்க துந்துபி வாத்யகோஷங்களுடன், நன்றாக அலங்காரஞ் செய்யப்பெற்று விளங்கும் அயோத்திமா நகரத்தினுள் புகுந்தனன். அது கண்டு அந்நகரத்திலுள்ளவர் யாவரும் மகிழ்ச்சி யடைந்தனர். அரசனும் அவ்வந்தணரை அந்தப்புரத்திற்கு அழைத்துச் சென்று விதிப்படி பூசைகளைச் செய்து மகிழ்ந்தனன்.

இவ்விதம் ருச்யச்ருங்கரை அழைத்துக்கொண்டு வந்த பின்பு வெகுநாள் சென்ற பிறகு வஸந்தருதுவர, அவ்வரசன் தான் முன்செய்ய உத்தேசித்த யாகத்தை நடத்தவேண்டுமென்று எண்ணங்கொண்டனன். அப்போது அந்த ருச்யச்ருங்கரை அம்மன்னவன் ஸாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டுத் தனது வம்சம் விருத்தியாகும்படி ஸந்தான முண்டாகும் பொருட்டு யாகஞ் செய்விக்க வேண்டினன். அவரும் அரசனிடம் ஸத்காரம் பெற்று அப்படியே யென்று ராஜனை நோக்கி யாகத்திற்கு வேண்டிய ஸம்பாரங்களைச் சித்தப்படுத்தவும் யாகக்குதிரையை விடும்படியாகவும் நியமித்தனர். ராஜனும் சுமந்திரனைப் பார்த்து ஸுயஜ்ஞர், வாமதேவர், ஜாபாலி, காச்யபர், வஸிஷ்டர், மற்றுமுள்ள பிராமணர்கள் ஆகிய ருத்விக்குகள் யாவரையும் அழைத்துக்கொண்டு வரக் கட்டளையிட்டனன். பிறகு சுமந்திரரும் விரைந்தோடிச் சென்று அவ்வந்தணர்களனைவரையும் அழைத்துக்கொண்டு வந்தனர்.

தசரதன் வந்தவர்களைப் பூசித்து அவர்களைப் பார்த்து 'யான் புதல்வனில்லாமைபற்றி அசுவமேதயாகஞ் செய்ய விரும்புகின்றேன்; இந்த ருச்யச்ருங்க மாமுனிவரது மகிமையால் எனது இஷ்டங்களெல்லாம் நிறைவேறவேணும்' என்றுரைக்க, பின்பு வஸிஷ்டர் முதலிய அந்தணர் யாவரும் அங்ஙனமே யாகுக வென்று ஆசிகூறினர்.

பின்பு தசரத மன்னவன் மந்திரிகளை நோக்கி யாகத்திற்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் விரைவில் சேகரிக்கும்படிக்கும் காக்கவல்லவர்களைக் காவல் வைத்துப் புரோஹிதர்களையும் பின்றொடரச் செய்து குதிரையை விடும்படிக்கும், ஸரயூநதியின் வடகரையில் யாகசாலையை ஏற்படுத்தும்படிக்கும் க்ரமம் தவறாமல் விதிப்படியே சாந்தி கருமங்கள் பலவும் நடத்தும்படிக்கும் ப்ரஹ்ம ராக்ஷஸர்கள் இதைக்கெடுக்க வழி தேடவொண்ணாதபடி மிகவும் பாதுகாப்புடன் நடத்தும்படிக்கும் திட்டம் செய்தனன்.

—கம்பராமாயணம்—

அதற்காக நான் செய்யவேண்டுவதைக் கூறவேணுமென்று தசரதனால் வேண்டப்பட்ட முனிவன் விரிவாகச் சொல்லத் தொடங்கினன் :— ஸ்வாயம்புவ மநுவின் மகன் உத்தானபாதன் ; அவன் மகன் ரோமபாத னென்பான். அவன் அங்க தேசத்திற்கு அரசனாக இருந்தான். அந்நாட்டில் வெகுகாலம் மழையின்மையால் கொடிய பஞ்சத்துயர் மிக்கவளவில் அம்மன்னவன் முனிவர்களை வரவழைத்து தானதருமங்கள் செய்த பின்னரும் மழை பொழியாதாக, பிறகு பெரியோர் பலரை விசாரித்ததில், ரிசியசிருங்க முனிவன் இந்நாட்டில் வந்தால் மழை பெய்யுமென்று அவர்களால் தெரிந்து கொண்டான். அம்முனிவனைத் தனது நாட்டிற்கு அழைத்துவருவது எங்ஙனம்? என்று உரோமபாதன் சிந்திக்க, விலைமகளிர் சிலர் தாம் சென்று அழைத்து வருவதாகக் கூற, அப்படியே, அவர்கட்கு அநுமதிதந்தனன். சென்ற அவ்வேசையர் ருசியசிருங்கனது ஆச்ரமத்திற்கு ஒரு யோசனை தூரத்தில் முனிவர்வேடத்துடன் ஒரு பர்ணசாலையை யமைத்துக்கொண்டு அதில் தங்கியிருந்து அக்கலைக்கோட்டு முனிவரது தந்தையான விபண்டக முனிவன் வெளியிற் சென்றிருந்த சமயம் நோக்கி அக்கலைக்கோட்டு முனிவரையணுகினர். அவர் தந்த உபசாரங்களைப் பெற்றுத் தம்மிடமே திரும்பினர்.

—வால்மீகி ராமாயணம்—

பின்பு மந்திரிகள் யாவரும் அப்படியே யென்று அக்கட்டளைப்படி யாகத்திற்கு வேண்டிய சடங்குகளை யெல்லாம் முறைப்படி நிறைவேற்றினர்.

இங்ஙனம் யாகஞ் செய்யவேண்டிக் குதிரையைவிட்டு ஓராண்டு நிரம்பி அக்குதிரையும் திரும்பிவர, ஸரயூ நதியின் வடகரையில் மன்னவனது யாகம் நடந்தது. அப்பொழுது பிராமணோத்தமர்கள் யாவரும் கலைக்கோட்டு முனிவரை முன்னிட்டுக் கொண்டு வேள்விச் சடங்குகளைச் செய்தனர். அந்த யாகத்தில் 'பிழை' யென்று சொல்லத் தக்கது ஒன்றும் நேரிடவில்லை. மந்திரத்திலாவது தந்திரத்திலாவது யாதொரு குறையும் விளையவில்லை. அந்த மஹா யாகம் நடந்த நாட்களில் திருப்திபெறாதவர் ஒருவருமில்லை.

அச்வமேதஞ் செய்யவேண்டிய நாட்கள் அநேகங்களாயினும் கல்பஸூத்ரங்களிலும் அதற்கு மூலமான பாகங்களிலும் முக்கியமாக மூன்று தினங்கள் கணக்கிடப்பட்டிருக்கின்றன. அதில் முதல் நாள் சதுஷ்டோமமென்றும், இரண்டா நாள் உக்த்யமென்றும், மூன்றாநாள் அதிராத்ரமென்றும் யாகங்களை நடத்துவதால் அந்தந்த யாகத்தின்பேரால் அந்தந்த தினங்களில் செய்யவேண்டிய செயல்கள் நடந்துவருவதுண்டு. அப்படியே அம்மூன்று தினங்களிலும் அம்மூன்று யாகங்களை நடத்தினர்.

இதர சாஸ்திரங்களில் இவ்வச்வமேதத்திற்கு மற்றுஞ்சில யாகங்களைச் செய்ய வேண்டுமெனச் சொல்லுவதாலே, அவைகளையுங் குறையறச் செய்வித்து நடத்தினர். அவை ஜ்யோதிஷ்டோம மொன்றும் ஆயுஷ்ய மொன்றும் அதிராத்ர மிரண்டும் அபிஜித்தொன்றும் விச்வஜித்தொன்றும் அப்தோர்யாமமென்கிற மஹாயஜ்ஞமொன்றும் ஆக ஏழு யாகங்கள். இப்படி அம்மூன்று தினங்களொழிய மற்றைத் தினங்களில் இந்த யாகங்களை அரசன் செய்வித்தனன்.

அப்பொழுது அம்மன்னவன் யாகத்தைக் காணவந்த அந்தணர்களுக்குப் பொன்னைக் கோடி கோடியாகக் கொடுத்தனன். பின்னும் பேதையாகிய ஓர் அந்தணன் உயர்ந்த நகைகளை வேண்டுமென்று யாசிக்க, அரசன் தன் கைவளையை யீந்தனன். இப்படி மிகுதியாகப் பொன்னும் பொருளும் அளிக்க யாவரும் களித்தனர். அவைகளைப்பெற்ற அந்தணரனைவரும் அவ்வரசனுக்கு விசேஷமாக ஆசீர்வாதஞ் செய்தனர். இங்ஙனம் யாகங்களனைத்திலும் சிறந்ததான அச்வமேதமென்னும் அம்மஹா யாகத்தைக் குறையறச் செய்து முடித்து அம்மன்னவன் மிக்க மனக்களிப்புற்றனன்.

—கம்பராமாயணம்—

மீண்டுசிலதினம் கழிந்தபிறகு கலைக்கோட்டு முனிவனுக்குத் தங்களிடம் விச்வாஸம் மிகும் பொருட்டுப் பலவகைக்கனிகளைக் கொணர்ந்து கொடுத்தனர் அவ்விலைமாதர்கள். இங்ஙனம் பல நாட்கள் கடந்தபின் ஒரு நாள் அம்முனிவரை நோக்கி தேவரீரும் எங்கள் ஆச்ரமத்திற்கு எழுந்தருள வேண்டு மென்று சொல்லி வணங்கி வேண்ட, அதற்கு உடன்பட்டு அவர்களோடு சென்றார் கலைக்கோட்டு முனிவர். அவ்விலைமகளிர் தமது ஆச்சிரமம் மிக அருகிலுள்ளதாகச் சொல்லிக்கொண்டு அம்முனிவருடன் அங்கதேசத்து வழியிற் சென்றார்களாக, அங்கு இம் முனிவரது பாதம்பட்ட மாத்திரத்திலே சள சள வென்று மழை பொழிந்து நீர்நிலைகள் யாவும் நிறைந்து ஆறுகளும் பெருகி யோடின. திடீரென்று இங்ஙனமான விசேஷத்தைக் கண்ட ரோமபாதன், கலைக்கோட்டு முனிவன் வந்தான்

—வால்மீகி ராமாயணம்—

பிறகு கலைக்கோட்டுமா முனிவர் "அதர்வணவேதத்தில் சொல்லப்பட்ட மந்திரங்களைக்கொண்டு செய்ய வேண்டிய ஓர் யாகத்தை விதிப்படி செய்யப்போகின்றேன்" என்று தசரதனிடம் சொல்லி அப்படியே அந்த வேள்வியைச் செய்து முடித்தனர். பிறகு தேவதைகளும் கந்தருவர்களும் ஸித்தர்களும் நான்முகக் கடவுளும் மற்றும் மஹரிஷிகளும் அந்த யாகத்தில் தம் தம் ஹவிர்ப்பாகம் வாங்கிக்கொள்வதற்காக ஒன்று கூடிவந்தனர்.

அங்ஙனம் வந்துசேர்ந்த தேவதைகள் யாவரும் அந்த யாகசபையில் பிறர் காணாதபடி யிருந்து பிரமதேவனை நோக்கி 'ஓ பகவானே! உமது அருள்பெற்று மிக்க பராக்ரமங்கொண்ட ராவணனென்னும் ராக்ஷஸன் எங்களனைவரையும் துன்புறுத்திக்கொண்டிருக்கின்றனன். நாங்கள் அவனை அடக்க வல்லமையற்றிருக்கின்றோம். முன்பு நீர் அவனிடமிருந்த ப்ரீதி கொண்டு எங்களால் எவ்விதத்திலும் அவனுக்குச் சாவு உண்டாகாதபடி வரம் கொடுத்தீர். நீர் கொடுத்த வரத்தைப் பாராட்டிக்கொண்டு நாங்களும் அவன் செய்யும் செயல்களை யெல்லாம் பொறுத்துக்கொண்டிருக்கின்றோம். அவ்வறிவுகேடன் மூவுலகங்களையும் நடுங்கச் செய்கின்றனன். திக்குப்பாலகர்களையும் பகைக்கின்றனன். தேவர்களுக்கெல்லாம் அரசாகிய இந்திரனையே பட்டத்தினின்றும் தொலைக்க விரும்புகின்றனன். அவன் நீர்கொடுத்த வரத்தினால் மதிமயங்கிக் கொழுத்து ரிஷிகளையும் யக்ஷர்களையும் கந்தர்வர்களையும் அந்தணர்களையும் மதியாமல் வருத்துகின்றனன். அவன் க்ரீடாபர்வதம் முதலிய இடங்களில் திரிந்துகொண்டிருக்கும்பொழுது சுடும்படி சூரியன் வெய்யிற் காயமாட்டான்; அவன் பூந்தோட்டங்களில் விளையாடிக்கொண்டிருக்கையில் 'வேகமாக வீசினால் மேலே புஷ்பங்கள் விழுமோ' வென்று பயந்து காற்றும் வேகமாக வீசுவதில்லை. எப்பொழுதும் வீசுகின்ற அலைகளையுடைய கடலும் அவனைக்கண்டால் கொஞ்சமும் அசையாமலிருக்கின்றது. கர்ப்பங்கலங்கும்படி மிகவும் பயங்கரமாகத்தோன்றுகின்ற அந்த ராக்ஷஸனிடத்தில் எங்களுக்கும் பயம் அதிகமாக உண்டாயிருக்கின்றது. ஆகையால் அவனைக் கொல்லவேண்டிய உபாயத்தை நீர் ஆலோசித்துச் செய்யவேண்டும்' என்று வேண்டினார்கள்.

—கம்பராமாயணம்—

போலுமென்று ஆலோசித்து மகிழ்ந்து சேனைகளுடன் அம்முனிவரை எதிர்கொள்ளச்சென்று வணங்கி, விலைமகளிரை நோக்கி 'நீங்கள் என்னுடைய துன்பத்தை உங்கள் உபாயத்தால் தீர்த்து விட்டீர்கள் என்று சொல்லிப் புகழ்ந்தனன். இப்படி நம்மை வஞ்சனையாகவா இவர்கள் இங்கு அழைத்துக்கொண்டு வந்தார்கள்! என்று சினம் பொங்கிநின்ற முனிவன், மன்னவன் உண்மை யுரைத்துத் தெளிவிக்கத் தெளிந்து, தேரின்மீதேறிக்கொண்டு ரோமபாத மன்னவனது நகரத்திற்குச் சென்றனன்.

அங்குச் சென்று சிங்காதனத் தமர்ந்து மன்னவனுடைய சாந்தை யென்னும் புதல்வியை மணம் புணர்ந்துகொண்டு அவ்விடத்தே இனிதுறைகின்றான்; அவனை இங்கு அழைத்து வருதல் வேண்டும்'—என்று கூறி முடித்தனன் வசிட்டமுனிவன்.

பிறகு, நானே சென்று அம்முனிவனை மீண்டு அழைத்து வருவேனென்று சொல்லிப் பரிவாரங்களுடன் அங்க நாட்டை நோக்கிப் புறப்பட்ட தசரதன் ரோமபாத மன்னவனால் நன்கு உபசரிக்கப்பெற்றுத் தான் வந்த காரியத்தைச் சொல்ல, அம்மன்னவன் 'நீர் அயோத்தி சென்று சேரும்; நான் முனிவனை அழைத்துக்கொண்டு வருகிறேன்' என்று

—வால்மீகி ராமாயணம்—

அது கேட்ட விஷ்ணு, 'ஓ தேவர்களே! நீங்கள் பயப்படவேண்டாம்: உங்களுக்கு இனிநன்மையுண்டாகும். மிகக் கொடியவனான ராவணனையும் அவன் பிள்ளைகளையும் பேரன்களையும் நண்பர்களையும் மந்திரிகளையும் மரபினர்களையும் மற்றுமுள்ள பந்துக்களையும் அழித்துத் தருமத்தைநிலைநிறுத்தும்பொருட்டு இப்பூமியில் தோன்றி உலகமனைத்தும் பரிபாலனஞ் செய்துகொண்டு பதினோராயிரமாண்டுகள் இருக்கப்போகிறேன்' என்றனன்.

இப்படித் தேவர்களனைவராலும் வேண்டிக்கொள்ளப்பட்டநான்முகனும் சிறிது ஆலோசித்து உடனே ஸந்தோஷமாக "துராத்மாவாகிய அந்த ராவணனைக் கொல்ல உபாயம் யாதெனில், அவன் கந்தர்வர்களாலும் யக்ஷர்களாலும் தேவர்களாலும் அஸுரர்களாலும் தனக்கு இறப்பு நேரிடக் கூடாதென்று வரங்கேட்டனன். நானும் அப்படியேயாகட்டுமென்று சொல்லிவிட்டேன். அவ்வரக்கன் அங்ஙனம் வரங்கேட்கும்போது மானிடர்களைப் பற்றிக் கேட்டால் தன்பெருமைக்குக் குறையாகுமென எண்ணி அவர்களால் தனக்கு அழிவு நேரிடக்கூடாதென்று மாத்திரம் கேட்கவில்லை. ஆகையால் மானிடர்களைக் கொண்டே அவனைக் கொல்லவேண்டும். இவனுக்கு வேறு வகையில் அழிவில்லை" என்று மொழிந்தனன். அம்மொழியைக் கேட்டுத் தேவர்களும் முனிவர்களும் மிகுந்த சந்தோஷங்கொண்டனர்.

இங்ஙனமிருக்கும்பொழுது ஸர்வேச்வரனாகிய ஸ்ரீ மஹாவிஷ்ணு தாம் சிலரை ரக்ஷிக்கும்படியான காலம் வாய்ந்ததே யென்று சந்தோஷத்தினால் சங்குசக்கரம் முதலிய ஆயுதங்களை யேந்திக் கொண்டு பீதாம்பரம் விளங்க அங்கே எழுந்தருளி நான்முகக்கடவுளின் அருகே வந்து நின்றனர். இப்படி எழுந்தருளின ஸர்வேச்வரன் நான்முகனுடன் கலந்து ஆச்ரித ரக்ஷணத்திற்குரிய செயல்களை ஊக்கத்துடன் நினைவிட்டுக்கொண்டிருக்க, தேவர்கள் அனைவரும் எழுந்து பணிந்து பலவகையாகப் புகழ்ந்து 'ஓ மஹாவிஷ்ணுவே! நீர் உலகங்களுக்கு நன்மை செய்யும்பொருட்டுத் தாமாகவே முன்வருந் தன்மையர். அப்படிப்பட்ட உம்மை நாங்கள் உலகைப் பாதுகாப்பான் பொருட்டுத் தூண்டவேண்டியதுமுண்டோ? அதோ யாகம் செய்துகொண்டிருக்கும் தசரத மஹாராஜனது மனைவிகள் மூவரிடத்திலும் நீர் உம்மை நான்கு வகையாகப் பிரித்துக்கொண்டு நாலு பிள்ளைகளாகப் பிறந்து ராவணனை யுத்தத்தில் முடிக்கவேண்டும். இதற்காக யக்ஷகந்தர்வஸித்தர்களும் முனிவர்களும் மற்றுமுள்ள தேவர்களுமாகிய நாங்கள் அனைவரும் உம்மையே சரணம் புகுகின்றனம்' என்றனர்.

—கம்பராமாயணம்—

சொல்லி மரியாதைகளுடன் தயரதனை அயோத்திக்கு அனுப்பிவிட்டு, பிறகு, முனிவன் திருவடிகளிலே விழுந்து வணங்கித் தசரத சக்ரவர்த்தியின் மனோரதத்தை நிறைவேற்றியருள வேணுமென்று வேண்டி, அதற்கிசைந்த அவருடன் தானும் அயோத்தி சேர, அங்கு அனைவரும் பரமானந்த மெய்தினர்.

பிறகு கலைக்கோட்டு முனிவன் தன்னை வரவழைத்த காரணத்தைத் தெரிந்துகொண்டு வேள்வி செய்விக்கச் சன்னத்தனாயினன். வேள்விக்கு வேண்டிய யாவும் சித்தமாக, தசரதன் யாக தீக்ஷை பெற்றனன். ஒரு வருஷகாலம் அசுவமேதயாகம் நடந்தது. ருச்யசிருங்க முனிவன் அந்த யாககுண்டத்தில் புத்திரகாமேஷ்டி யாகஞ் செய்தனன். அப்போது செம்பட்ட மயிரையும் செந்நிறக் கண்களையுமுடைய பூதமொன்று பொன்தட்டின்

—வால்மீகி ராமாயணம்—

இப்படி அம்மஹானுபாவன் தேவர்களுக்கு வரங்கொடுத்து அவர்கள் வேண்டிக் கொண்டபடி நிலவுலகத்தில் தான் வந்து பிறக்கக் கருதித் தசரத மஹாராஜனைத் தகப்பனாக விரும்பி மறைந்தனன். பிறகு தசரதமன்னவன் புத்திரகாமேஷ்டியென்னும் யாகத்தைத் தொடங்கிச் செய்தனன். அந்த யாகத்தில் ஆஹவநீயாக்நி குண்டத்தினின்று பெரும் பூத மொன்று மிகுந்த ஒளி பொருந்தி வெளியே கிளம்பிற்று. அது மிகுந்த திறமையும், சிறந்த வலிவும் பெற்று, கறுப்புஞ் சிவப்புங் கலந்த ஆடைகளணிந்து, சிவந்த முகத்துடன் தென் பட்டது. மேலும் அது துந்துபி வாத்யம் போன்ற வொலியை யொலித்து, உடம்பிலும் தலையிலும் மீசையிலும் சிங்கத்தின் மயிர்போல் நிகுநிகென்று நெருங்கி விளங்குகிற மயிர்கள் அமையப்பெற்று, சுபலக்ஷணங்களனைத்தும் பொருந்தியிருந்தது.

அது உயர்ந்த ஆபரணங்களால் அலங்காரம் செய்யப்பெற்றுப் பர்வத சிகரம்போல் உயர்ந்து, கொழுத்த புலிபோன்ற உடல்வலியுடையதாகி ஸூர்யனையொத்த உருவங்கொண்டு கொழுந்துவிட்டெரியும் அக்கினிஜ்வாலையை நிகர்த்து மிகவும் அற்புதமாக விளங்கிற்று.

இஃதன்றியும் வெள்ளியினால் செய்தமூடியிடப் பெற்றுப் பொன்னாலமைக்கப்பெற்ற பாத்திரத்தில் திவ்ய பாயஸத்தை நிரப்பி இரண்டு கைகளாலும் அணைத்துக்கொண்டு மேற் கிளம்பித் தசரதனைப் பார்த்து 'அரசனே! நான் பிரமனிடமிருந்து வந்தவனெனத் தெரிந்து கொள்' என்றது.

அப்பொழுது அம்மன்னவன் கையைக் கூப்பிக்கொண்டு 'பகவானே! உனக்கு நல்வரவு உண்டாகவேண்டும்; நான் உனக்குச் செய்யவேண்டியதை அருளிச்செய்தருள்க' என்றனன். பிறகு அந்த ப்ராஜாபத்ய புருஷன் மீளவும் அரசனைப் பார்த்து, 'ராஜனே! நீ அசுவமேதஞ் செய்தும் புத்திரகாமேஷ்டி செய்தும் தேவர்களை ஆராதித்தனையாகையால் உனக்கு இப்பொழுது இந்தப் பாயஸம் கிடைத்தது. மஹாராஜனே! இப்பாயஸம் ஸ்ரீ மஹாவிஷ்ணுவால் நிருமிக்கப்பட்டது. விரைவில் ஸந்தானத்தை யுண்டுபண்ண வல்லது. இதைக் கைப்பற்றிப் பத்தினிகளுக்குக் கொடுத்து உண்ணச்சொல்; பிறகு புத்திரர்களைப் பெறுவாய்' என்று சொல்லிற்று.

—கம்பராமாயணம்—

மீது அமிர்த பிண்டத்தைத் தாங்கிக்கொண்டு ஹோமாக்நியில் நின்றும் விரைந்தெழுந்து வந்து அந்த அமுதத்தட்டைத் தரையிலே வைத்து விட்டு வந்த வழியே மீள, ருச்யசிருங்கன் முறைப்படி அந்தச் சுதையைப் பட்டமஹிஷியர்க்குத் தரும்படி தசரதனிடம் கூறினான். அக்கட்டளையின்படியே மன்னவன் கௌசலைக்கும், கைகேயிக்கும், சுமித்திரைக்கும் முறையே சுதையை யளித்து பின்னும் எஞ்சியதைச் சுமித்திரைக்கு அளித்தனன். முனி வன் யாக ஹோமம் முடித்ததும் யஜமானனாயிருந்த தசரதன் யாகசாலையை விட்டுப்புறப்பட்டு பூர்ணாஹுதிக்கு அங்கமாகப் பூரிகொடுத்தற் பொருட்டு ஓலக்கமண்டபத்தை யடைந்த னன். அந்தணர்க்குத் தக்ஷிணை கொடுத்து அவபிரதஸ்நானஞ் செய்து ராஜ ஸபையை யடைந்து வஸிஷ்டரையும் ரிச்யச்ருங்க முனிவரையும் வணங்க, அவரவர்கள் மன்னவனை ஆசீர்வதித்துத் தம்தம் இருப்பிடமேகினர். பிறகு சக்ரவர்த்தியின் தேவியர் மூவரும் கருத் தரித்து நாளடைவில் ப்ரஸவித்தனர்.

—வால்மீகிராமாயணம்—

அரசனும் மனக்களிப்புற்று, தேவ பாயஸம் நிறைந்த அந்தப் பொன் பாத்திரத்தைத் தலையால் வாங்கிக்கொண்டு அப்பூதத்தை வணங்கி மிகுந்த சந்தோஷத்துடன் அதை வலம் வந்து பூஜித்தனன். உடனே அப்பூதம் தான் வந்த காரியத்தை நிறைவேற்றி அந்த அக்கினியிலேயே மறைந்துவிட்டது.

அரசனும் அரண்மனைக்குட் சென்று கௌஸல்யையை நோக்கி 'இப்பாயஸத்தைப் பெற்றுக்கொள்' என்றுரைத்து அப்பாயஸத்தில் பாதியைக் கௌஸல்யைக்குத் தந்தனன். மிகுந்த பாதியிலும் பாதியைச் சுமித்திரைக்குத் தந்தனன். சுமித்திரைக்குத் தந்து மிகுந்ததிற் பாதியைக் கைகேயிக்கு ஈந்தனன். நின்ற பாகத்தை மறுபடியும் சுமித்திரைக்குக் கொடுத்தனன். இங்ஙனம் அரசன் பாயஸத்தை வெவ்வேறாகப் பங்கிட்டுக் கொடுக்க, மனைவிகள் மூவரும் அதை வாங்கிக்கொண்டு மிகுந்த மனக் களிப்புடன் உண்டு, சில காலஞ் சென்ற பின்பு கருவுற்றனர். பிறகு அம்மன்னவன் தனது பத்தினிகள் கர்ப்பம் நிறைந்து விளங்குவதைக் கண்டு மனக்கவலை தீர்ந்து மனமகிழ்ந்தவனாகி வீற்றிருந்தனன்.

ஸ்ரீ மஹாவிஷ்ணு அம் மஹாராஜனுக்குப் பிள்ளையாக அவதரிக்க உத்தேசித்திருக்கையில் பிரமதேவன் தேவர்களனைவரையும் நோக்கி "தேவர்களே! ஸ்ரீ மஹாவிஷ்ணு தான் மொழிந்த மொழி தவறாமல் மானிடனாக அவதாரஞ் செய்து ராவணனை அழிக்கப் போகின்றனன். ஆகையால் அத் திருமாலுக்குப் படைகளாகி உதவியா யிருக்கத்தக்க மிகுந்த பலமுடையவர்களும், ராக்ஷஸர்களோடு போர்புரியவல்ல காமரூபங் கொள்ளத் தகுந்தவர்களுமாயிருப்பவர்களை நீங்கள் படைக்கவேண்டும். அப்ஸரஸ் ஸ்த்ரீகளிடத்திலும், கந்தர்வ யக்ஷ பன்னக ருக்ஷ வித்யாதர கின்னரஸ்த்ரீகளிடத்திலும், வானரஸ்த்ரீகளிடத்திலும், வானர வுருவங்கொண்டு உங்களோடொத்த பராக்கிரமுடைய புதல்வர்களை நீங்கள் படைக்க வேண்டும். முன்னமே நான் கரடிகளுக்குத் தலைவனாகிய ஜாம்பவானென்பவனைப் படைத்திருக்கின்றேன். நான் கொட்டாவி விடும்போது உடனே என் வாயிலிருந்து அவன் விரைவிற் பிறந்தனன்" என்றுரைக்க, அது கேட்ட தேவர்களும் அவனது கட்டளையை ஏற்று வானர வுருவங்கொண்ட புதல்வர்களைப் பிறப்பித்தனர். ரிஷிகளும் சித்தர்களும் வித்யாதரர்களும் உரகர்களும் சாரணர்களும் மஹா வீரர்களான வானர குமாரர்களைப் பெற்றனர்.

இந்திரன் வாலியையும், சூரியன் சுக்ரீவனையும், ப்ருஹஸ்பதி தாரனையும், குபேரன் கந்தமாதனையும், அக்னி நீலனையும், அசுவினிதேவதைகளிருவரும் மைந்த த்விவிதர்களையும்,

—கம்ப ராமாயணம்—

கௌஸல்யா தேவி புனர்பூசத்தில் கர்க்கட லக்கினத்தில் ஸகல லோகநாதனை திருமாலைப் புதல்வனாகப் பெற்றனள். கைகேயி பூசத்தில் மீன லக்னத்தில் ஒரு புதல்வனைப் பெற்றனள். சுமித்திரை ஆயில்ய நக்ஷத்திரத்தில் கர்க்கடலக்னத்தில் ஒரு புதல்வனையும், மகா நக்ஷத்திரத்தில் சிங்கராசியில் மீண்டும் ஒரு புதல்வனையும் பெற்றனள். உடனே அவர்களது தோழிமார்கள் அரசனிடம் விரைந்து சென்று புத்திரர் பிறந்த ஸந்தோஷ ஸமாசாரத்தைச் சொல்லி ஆனந்தக் கூத்தாடி நிற்க, அரசனும் உவந்து சோதிடம் வல்லாரை வருவிக்க, வந்த அவர்கள் பிறந்தநாள் தக்காலகிரகம் முதலியவற்றை யாராய்ந்து 'உலகுகட்கு நேர்ந்துள்ள வருத்தம் யாவும் இப்புதல்வர்களால் நீங்கும்' என்று பாராட்டிக் கூறி எல்லாப் புதல்வர்கட்கும் ஜாதகமெழுதித்தந்தனர். தந்தை முறைப்படி ஸரயூ நதியில் தீர்த்தமாடித் தானதருமங்களைச் சிறப்பாகச் செய்தனன். சிறைப்பட்ட அரசரை விடுவிக்கு

